உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சாம்பசதேசாயநம:

# வைதிகசம்போதினி.

## பாயிரம்.

### திருவிளையாடற்புராணம்.

விருத்தங்கள்.

மல்குகவேதவேள்வி வழங்குகசுரந்துவானம்
பல்குகவளங்களெங்கும் பரவுகவறங்களின்பம்
நல்குகவுயிர்கட்கெல்லா நான்மறைச்சைவமோங்கிப்
புல்குகவுலகமெல்லாம் புரவலன்செங்கோல்வாழ்க.

### பெரியபுராணம்.

உலகெலாமுணர்ந் தோதற்கரியவ
னிலவுலாவிய நீர்மலிவேணிய
னலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்.

### தத்துவராயர்.

குறள்வெண்பா.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொ னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணாடு.

### திருத்தொண்டத்தொகை.

"தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேன்"



## நூல்.

வேதம் அநாதி நித்தியமென்பதற்குப் பிரமாணம்.

---

### சூதசங்கிதை.

முனிவரர்வேள்விச்சாலை முனிவருமன்னசாலை
[illegible]ணைசசிறார்கள் புகழ்மறையோதுசாலை
கனிவுறுநடனசாலை களைபிறகல்விச்சாலை
யினிதுறவெங்குமல்கு மிணர்த்துழாய்ப்படலைமாலை.

பரிவாரமனைத்துஞ்சூழப் பகர்ந்தவத்தலத்தில்யாமிப்
புரிவார்மென்குழலாளோடும் பொலிந்திருக்கின்றேமுன்னோர்
விரிவாயபிரளயத்தில் விண்ணுலகாதியாவுஞ்
சரிவாகியிலயமாகச் சந்தமார்மறைகள்யாவும்.

அத்தலத்திருக்குநம்மெய் யடைந்திருந்தனவான்மீட்டு
மொத்தகற்பாதியிற்சீ ருற்றநம்மெய்யினின்றும்
வித்தகவுருவங்கொண்டுவெளிக்கொடுபத்தியோடு
சுத்தநீர்த்தீர்த்தமொன்று தொட்டனகடற்றீரத்தில்.

பரமசிவத்தி னிடத்தினின்றும் வேதந்தோன்றியவாறு.



### திருவிளையாடற்புராணம்,

பண்டுபோற் பின்னுமுத்தொழினடாத்தப் பராபரஞ் சுடர்திருவுள்ளங்,கொண்டுபோர்த்திகிரி வலவனைத்தரவக் குரிசிறன்னுந்திமுணடகத்தில், வண்டுபோற்பிரமனுதித்துமூவுலகும் வரன்முறைபடைக்குநாணஞ்ச, முண்டுபோற்றிய வானவர்க்குயிரளித்த வும்பர்நாயகன் றிருவாக்கில்.

பிரணவமுதித்தததனிடைவேதம் பிறந்தனநைமிசாரணியத்
தருணிறைமுனிவர்கண்ணுவர்கருக்க ராதியோரதிகரித்தவற்றின்
பொருணிலைதெரியாதுள்ளமுமுகமும் புலர்ந்தனரிருப்பவப்போதத்
திருண்மலவலிவென்றவனரபத்தனென்றொருவேதியன்வந்தான்.

கீட்டிசைமுகத்தொன்றடுத்தநாலைந்திற் கிளைத்ததாலிருக்கதுதென்பா
லீட்டியவிரண்டாம்வேதநூறுருவோ டெழுந்ததுகுடதிசைமுகத்தி
னீட்டியசாமமாயிரமுகத்தா னிமிர்ந்ததுவடதிசைமுகத்தி
னூட்டியவொன்பதுருவொடுகிளைத்து நடந்ததுநான்கதாமறையே.

## வேதச்சிறப்பு.

மறையேநமதுபீடிகையா மறையேநமதுபாதுகையா
மறையேநமதுவாகனமா மறையேநமதுநூபுரமா
மறையேநமதுகோவணமா மறையேநமதுவிழியாகு
மறையேநமதுமொழியாகு மறையேநமதுவடிவாகும்.

வேதந்தானேநமதாணைச் சத்திவடிவாய்விதிவிலக்காய்ப்
போதங்கொளுத்திநிலைநிறுத்திப் போகங்கொடுத்துப்பல்லுயிர்க்கும்
பேதஞ்செய்யும்பிணியவிழ்த்தெம் பிரியாவீடுதருவதுதே
ஞதஞ்செய்யுந்தார்வேந்தே நமதுசெங்கோலதுவாகும்.

## திருமந்திரம்.

வேதத்தைவிட்ட விடமில்லைவேதத்தி
ேனுதத்தகுமற மெல்லாமுளதர்க்க
வாதத்தைவிட்டு மதிஞர்வளமுற
வேதத்தையோதியே வீடுபெற்றார்களே.

## திருவள்ளுவர்மாலை.

செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே — செய்யா
அதற்குரியா ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரியா ரல்லாதா ரில்

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதால் - ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவ
ரோதுங் குறட்பா வுடைத்து.

ஆகமம் அத்துணைச்சிறப்புடையது அன்றென்பதற்குப் பிரமாணம்.

ஸ்ரீ குமாரதேவர்

## வேதநெறியகவல்.

சாதன நான்குந் தன்னிடத் துதித்த
பின்னர் விசாரம் பேத மபேத
மெனவிரண் டவையு ளீசனு முயிரு
மிருமுத லென்றே யியம்புத லிரிவு
மொருமுத லென்ற லொள்ளிய காட்சி
யூனையின் வேதத் தந்தவி சாரஞ்

செய்திடல வேண்டுஞ் சிறப்பெனி லாகம
மன்றது சிறப்பா மத்தியான் மீகஞ்
சொலலிய பிரபல சுருதியே சிறப்பு
வித்தக வன்றி யெழிலார் சுருதி
யரசன துரையி னவைமற்றெல்லா
மற்றோ ருரையின் மறையினைப் பற்றி
நிற்குமி தன்றி நிமலன் சுவாசம்
வேத மாகமம் விளங்கிய வாக்கா
மதனுன் முந்திய தருமறை யாகும்.

ஊர்த்துவமுகத்திற்பிறந்த ஆகமஞ் சிறப்புடையதன்றிச் சத்தியோ சாதாதிமுகங்களிற்பிறந்த வேதங்கள் சிறப்புடையன வல்ல வென்று சைவநூலிற் சொல்லி யிருக்கின்றதே யென்னில்,

## சைவசமயநெறிக்குறள்.

சத்தியோ சாதத்திற் காமிக மாதியைந்து
முற்பவித்து நீடுமென வோர்.

தீத்தமுத லைந்துந் திகழ்வாம வத்திரத்தில்
வாய்த்தன வென்றே மதி.

விசயமுத லைந்தும் விகிர்தவகோ ரத்தி
லிசையவுதித் தேயிலங்கு மென்.

தற்புருடத் தேரௌர வாதியைந்துஞ் சாதமா
யற்புதமாய் நீடு மறி.

ஈசானந் தன்னிற் புரோற்கீத மாதியெட்டுந்
தேசார வேயுதிக்குந் தேறு.

என்று சைவசமயநெறிவிளக்கத்திற் கூறியிருத்தலால் அத்தூஷணம் ஆகமத்திற்குந் துல்லியமென்றறிக. ஆயின் ஈசானமுகத்திற்பிறந்த புரோற்கீதமாதி யெட்டாகமங்கண் மாத்திரமே சிறப்புடையன வாகட்டுமென்னில் இங்ஙனங் கூறுதல் ஆகமிகள் கூற்றன்று; ஆயினும் வேதத்திற் காதியாகிய பிரணவம் ஈசானமுகத்திற் பிறந்ததாகத் தியானசுலோகத்திற் கூறியிருக்கின்றமையால் அச்சிறப்புடைமை வேதத்திற்கும் உண்டு; அப்போதிரண்டுஞ் சரியே யென்னில் இச்சங்கைக்கு உத்தரங்கூறிய ஷை அகவலாற் றானே விளங்கும்.

## வேதப்பிராமாணியம்.

### சூதசங்கிதை.

எல்லாப்பிரமாணங்களுக்கு மிகைமுக்கியமாம்பிரமாணம்
வல்லாருரைக்கும்வேதமே மற்றையதற்குத்தன்னாலும்
புல்லாகிற்கும்பிறவாலும் பொருந்துவாதைசற்றுமில்லை
யல்லாப்பிரத்தியக்கமுத லானபிரமாணங்களுக்கு.

ஒழியாமாயையால்வாதை யுண்மெறைக்குவிரோதமுறு
மொழியார்தருநற்புராணங்கண் முற்றும்பிரமாணங்களே
கழியாமறைமூலகமாகாக் கசட்டுநூல்கள்யாவுமிகு
பழியார்நூல்கள்பிரமாணப் படாதுபடிமுற்றளந்தோயே.

மறையினல்வருத்துணரத் தக்களுக்குமப்பொருளி
னிறையளவையனுசரியா னெடுந்தருக்கமென்செய்யு
மறைதருமம்மறையுரைக்கி ஞாதிதானம்மறைக்குத்
துறைகெழுமுதன்னாலும் பிறவாலுந்தோடமில்லை.

சிலர்வேதஞ்சிவனாலே செப்பப்பட்டதுவென்றுஞ்
சொல்லாஞ்சத்தஞ்சுயமே தட்டமாவிருந்தாலு
மலராத்தசங்கமத்தாற் பிரமாணமாகுமென்று
நலமேவுபரனருளே நாடுமுனிவீருரைப்பர்.

அன்னியசங்கமத்தாலே தோன்றுதல்செவ்வரத்தம்பூத்
துன்னிடச்செக்கிறம்பளிங்கிற் றோன்றுதல்போற்பிராந்தியாம்
பின்னியவாத்தவபேட்சை யாற்சத்தம்பிரமாண
நன்னிலையீராகமாட்டாதென்று நன்குணர்வீர்.

சாயனாத்தசங்கமத்தாற் சத்தத்திற்குச்சுயஞ்சித்த
மாயபிராமாணியந்திரோ பூதமாகுமேதவிரப்
பாயபுகழீர்வேறன்று பரனாற்சொல்லப்பட்டதெனுந்
தூயபக்கத்தினும்வேதம் பிரமாணந்தான்சொல்லுங்கால.

அற்பக்கியனாகியசீவற் கணுக்குந்தோடமெவனுடைய
கற்பார்தியானத்தாலெல்லா மலமுங்கழிந்துதொலைதீருமப்
பொற்பார்சருவக்கியனாகிப் பொலியுஞ்சுத்தபரசிவற்குச்
சொற்பாய்புகழீர்தோடமில்லை யவனேயாத்தனெனச்சொல்வார்.

ஆதலாலிருபக்கத்திலும்மறை யள்ளவையென்னும் விடயத்திலேய மென், மேதகும் பரமார்த்தமதாகவே வேதாந்தான சொலனுதியென் றோருவீர், சேதமில்லாவறிவுருவாகிய சிவனதற்கு விஞ்சகனென் பராற், நீதகன்றீர்வியஞ் சகத்தன்மையைத் தெரிந்து செய்தானென் பார்சிலர்வேறன்றே.

ஆதலான்மறையிற்சொல்லப்பட்டஅருத்தமே
உண்மையானது கண்டீர்.

## வேதார்த்தம்,

பாவுறுமறையருத்தம் பரமென்றுமபரமென்று
மிருவகையாகுமுன்ன தியல்சகளத்தின்வேறாய்ப்
பொருவினிட்களமாய்நின்ற பூரணசிவமேயாகும்
விரவுபின்னதுதான்றன்மமதன்மமென்றிருவேறுமால்.

தருமமென்பதுயாகாதி சகலபுண்ணியமாமற்ற
தொருவருஞ்சிவத்தைச்சார்தற் குற்றசாதகமேயாகும்
வெருவுபின்னதுதான்கோற லாதியவினைகளின்ன
மருவுறுதகற்றுமாறே மறையெடுத்துரைக்குமன்றே.

## திருவிளையாடற்புராணம்.

அருமறைநால் வேறுகையால்வருண மாச்சிரமங்களுநான்காங், தருமம்யாகாதிகருமமுமறையின் றகைமையிற்றோன்றின மறையுங்,க ருமநூன்ஞான நூலெனவிரண்டாங் கருமநூலிவனருச்சனைக்கு, வரு வினையுணர்த்துஞான நூலிவன்றன் வடிவிலாவடிவினையுணர்த்தும்.

## வேதத்திற் குறுதியாவோர்.

அந்தமறைகடமக்குறுதி யாவாரந்நூல்வழிகலிநோய்
சிந்தமகத்தீவளர்த்தெய்பாற் சிந்தைசெலுத்துமந்தணரா
லிந்தமறையோர்வேள்விமழைக் கேதுவாகுமவர்தம்மை
மைந்த விகழ்ந்துகைவிட்டா யதனுன்மாரிமறுத்தன்றால்.

## அவர்கள் சிறப்பு.

மும்மைப்புவனங்களுமுய்ய மூத்திவேட்குமிவர்தம்மை
நம்மைப்போலக்கண்டேமூகி காணுமாவறம்பெருக்கிச்
செம்மைத்தருமக்கோலோச்சித் திகிரியுருட்டிவாழ்தியென
வும்மைப்பயன்போலெவிவந்தா ருவவாக்கிழியொன்றுதவுவார்,

## வைதிகச்சிறப்பு.

மறைவழிமதங்கட்கெல்லா மறைபிரமாணம்பின்சென்
றறைதருமிருதியெல்லா மவைக்கநுகுணமாமின்ன
முறையினான் மார்த்தமென்று மொழிவதம்மார்த்தஞ்சேர்ந்த
துறைகள்வைதிகமாமேலாச் சொல்வதிச்சுத்தமார்க்கம்.

தெருட்பெறுபோகவீடு காரணமாய்ச் சிவமயமாமறைப்பொருளை, யிருட்கெடவுரைத்தேமிப்பொருட்கதிக மில்லையிப்பொருளெலா முமக்கு, மருட்கெடத்தெளிவதாகெனவினைய வழிவழாமாதவர்புரத்தை, யருட்கையாற்றடவியிலிங்கத்துட்புகுந்தா னருள்பழுத்தன்ன தேசிகனே.

### சிதம்பரபுராணம்.

ஓதுபன்னெறியுள்வேத வொழுக்கமேயுயர்ச்சி முத்தி
சாதனம்பலவுட்பூதி சாதனந்தலைமைவெற்பின்
மாதொருபாகற்கேற்க வழிபடும்பூசைதன்னு
ளாதரமவன்றன்னன்பர்க் கன்பினிலளிக்கும்பூசை.

தில்லைவாழந்தணர்களாகிய தீக்ஷிதசுவாமிகள் வைதிக
ஆசாரமேயுடையவர்களென்பதற்குப் பிரமாணம்.

### கோயிற்புராணம்.

நாவிரவுமறையினராய் நாமிவரிலொருவரெனுந்
தேவர்கடேவன்செல்வச் செல்வர்களாய்த்திகழ்வேள்வி
பாவுநெறிபலசெய்யும் பான்மையராய்மேன்மையராய்
மூவுலகுந்தொழுமூவா யிரமுனிவரடிபோற்றி.

மன்றமர்கடவுன்போற்றி யெம்முடன்மருவினோரின்
முன்றிகழ் முனிவர்மூவா யிரவரைமுதுவேள்விக்கென்
றன்றயன்வேண்டிக்கொண்டா னவர்களையந்தர்வேதி
சென்றுடன்கொணர்வாயென்று திருமுனியருளிச்செய்தான்

அங்கவர்தங்கடங்க ளங்கிகளாதரித்து
மங்கையர்மகளிர்மைந்தர் வான்கலையரணிமற்று
மெங்களுக்கிறையுவேற்றி யிரதமூர்ப்புரவிபூட்டிப்
பொங்கியவோமத்தேனுப் போதுவதொடர்ந்துபோத.

## சிதம்பரபுராணம்.

எண்டலத்துறுகடவுள ரிழைத்திடும்யாகத்
துண்டிவேண்டியவண்டர்தம் மேனியோவொளியே
கொண்டவங்கியின் கொழும்புகையண்டகூடத்து
மண்டலாற்றெய்வ நதியுமாகுதிமணக்கும்.

மூவாயிரமா முனிவோர்முயலுந்
தாவாதமகந் தனிலுண்டுபொதுத்
தேவாடல்பணிந் தருள்சேர்நகரத்
தோவாதகளிப் பினரும்பரெலாம்.

## பெரியபுராணம்.

வருமுறையெரிமூன்றோம்பி மன்னுயிரருளான்மல்கத்
தருமமேபொருளாக்கொண்டு தத்துவநெறியிற்செல்லு
மருமறைநான்கினோடா றங்கமும்பயின்றுவல்லார்
திருநடம்புரிவார்க்காளாஞ் சிறப்பினாற்சிறந்தசீரார்.

மறுவிலாமரபின்வந்து மாறிலாவொழுக்கம்பூண்டார்
அறுதொழிலாட்சியாலே யருங்கலிநீக்கியுள்ளார்
உறுவதுநீற்றின்செல்வ மெனக்கொள்ளுமுள்ளமிக்கார்
பெறுவதுசிவன்பாலன்பாம் பேறெனப்பெருகிவாழ்வார்.

செல்கின்றபோழ்தந்தத் திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்த பயில்வேள்வியெழும்புகையு
மல்குபெருங்கிடையோது மடங்கணெருங்கினவுங்கண்
டல்குந்தங்குலநினைந்தே யஞ்சியணைந்திலர்நின்றார்.

நின்றவரங்கெய்தரிய பெருமையினைநினைப்பார்முன்
சென்றிவையுங்கடந்தூர்சூ ழெயிற்றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைக டொறுங்குலவும்வேதிகைக
ளொன்றியமூவாயிரமங் குளவென்பாராகுதிகள்.

## திருவிளையாடற்புராணம்.

வழுதியால்விடுக்கப்பட்ட வாதவூர் முனிகடம்மைப்
பழுதிலாப்பாடல்கொள்வார் பதிபலபணிந்துபோற்று
முழுதுணர்மறையோர்வேள்விப் புகையண்டமுடிநீண்டேழி
யெழுவடவரைபோற்றோன்று மெழிற்றில்லைமூதூர்சேர்ந்தார்.

## சூதசங்கிதை.

மாமறைமுழுக்கமறுப்பெருஞ்சாலை மன்னிய யாகநற்சாலை
நாமருவினிதூணல்கிடுசாலை நறியநீர்வாக்கிடுசாலை
காமருசெம்பொனுடைகசாலை கூரையிறவறம்பயில்சாலை
தூமணியொளிரம்மறுகிருபாலுந் துவன்றுவபற்பலமாதோ.

திருஞானசம்பந்தசுவாமிகள்

## திருக்கடைக்காப்பு.

கற்றாங்கெரியோம்பிக் கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண் முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப் பற்றாபாவமே.

பறப்பைப்படுத்தெங்கும் பசுவேட்டெரியோம்புஞ்
சிறப்பர்வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
பிறப்பில்பெருமானைப் பின்றாழ்சடையானை
மறப்பிலார்கண்டீர் மையறீர்வாரே.

அப்பர்சுவாமிகள்

## தேவாரம்.

சிந்தையைத்திகைப்பியாதே செறிவுடையடிமைசெய்ய
வெந்தைநீயருளிச்செய்யா யாதுநான்செய்வதென்னே
செந்தீயார்வேள்வியோவாத் தில்லைச்சிற்றம்பலத்தே
யந்தியும்பகலுமாட வடியிணையலசுங்கொல்லோ.

சுந்தரமூர்த்திசுவாமிகள்

## திருப்பாட்டு.

முட்டாதமுச்சந்திமூவா யிரவர்க்குமூர்த்தியென்னப்
பட்டானைப்பத்தராய்ப் பாவிப்பார்பாவமும்வினையும்போக
விட்டானைமலையெடுத்த விராவணனைத்தலைபத்துநெரியக்காலாற்
றொட்டானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே

## திருவிசைப்பா.

பூந்துருத்திநம்பிகாடநம்பியருளிச்செய்தது.

கோயில்.

கடியார்கணம்புல்லர் கண்ணப்பரென்று
னடியாரமருலக மாளநீயாளாதே
முடியாமுத்தீவேள்வி மூவாயிரவரோடுங்
குடிவாழ்க்கைகொண்டு குலாவிக்கூத்தாடினையே.

கண்டராதித்தரருளிச்செய்தது.

கோயில்.

ஓவாமுத்தீயஞ்சுவேள்வி யாறங்கநான்மறையோர்
ஆவேபடுப்பாரந்தணாள ராகுதிவேட்டியர்வார்
மூவாயிரவர்தங்களோடு முனனரங்கேறிநின்ற
கோவேயுன்றன்கூத்துக்காணக் கூடுவதென்றுகொலோ.

முத்தீயாளர்நான்மறையர் மூவாயிரவர்நின்னோ
டொத்தேவாழுந்தன்மையாள ரோதியநான்மறையைத்
தெத்தேயென்றுவண்டுபாடுந் தென்றில்லையம்பலத்து
ளத்தாவுன்றனாடல்காண வணைவதுமென்றுகொலோ.

திருவாலியமுதனாருளிச்செய்தது.

கோயில்.

ஓமப்புகையுமகிலின்புகையு முயர்ந்துமுகிறோயத்
தீமெய்த்தொழிலார்மறையோர்மல்கு சிற்றம்பலந்தன்னுள்
வாமத்தெழிலாரெடுத்தபாத மழலைச்சிலம்பார்க்கத்
தீமெய்ச்சடைமேற் றிங்கள்சூடித்தேவனாடுமே.

கூத்தனைவானவர் தங்கொழுந்லைதக் கொழுந்தாயெழுந்த
மூத்தனைமூவுரு வின்முதலை முதலாகிநின்ற
வாத்தனைத்தான்படைக்கு மந்தணர்தில்லை யம்பலத்து
ளேத்தநின்றாடுகின்ற வெம்பிரானடி சேர்வன்கொலோ.

## திருப்புகழ்.

தாதுமாமலர் முடியாலேபத, மூதநூபுரவடியாலேகர
தாளமாகிய கொடியாலேமடி-பிடியாலே
சாடைபேசியவுகையாலேமிகு, வாடைபூசியநகையாலேபல
தாறுமாறுசொன்மிகையாலேயன-நடையாலே

மோதின்மீறியமுலையாலேமுலை, மீதிலேறியகலையாலேவெகு
மோடிநாணயவிலையாலேமய-றருமானார்
மோகவாரிதிதனிலேநாடொறு, மூழ்குவேனுனதடியாராகிய
மோனஞானிகளுடனேசேரவு-மருள்வாயே

காதலாயருள்புரிவாய்நான்மறை, மூலமேயெனவுடனேமாகரி
காணநேர்வருதிருமானாரணன்-மருகோனே
காதன்மாதவர்வலமேசூழ்சபை, நாதனார்தமதிடமேவாழ்சிவ
காமநாயகிதருபாலாபுலி-சையில்வாழ்வே

வேதநூன் முறைவழுவாமேதினம், வேள்வியாலெழில்புனைமூவாயிர
மேன்மைவேதியர்மிகவேபூசனை-புரிகோவே
வீறுசேர்வரையரசாய்மேவிய, மேருமால்வரையெனநீள்கோபுர
மேலைவாயிலின்மயின்மீதேறிய-பெருமாளே.

## பெரியதிருமொழி·

மாவாயினங்கமதியாதுகூறிமழை மாமுதுகுன்றெடுத்தாயர்தங்கள், கோவாய்நிரைமேய்த் துலகுண்டமாயன் குரைமாகழல்கூடுங் குறிப்புடையீர், மூவாயிரநான்மறையாளர்நாளு முறையால்வணங்க வணங்காயசோதி, தேவாதிதேவன்திகழ்கின்றதில்லைத் திருச்சித்திர கூடஞ்சென்றுசேர்மின்களே.

காயோடுநீடுகனியுண்டுவீசு கடுங்காலுகர்ந்துநெடுங்காலமைந்து, தீயோடுநின்றுதவஞ்செய்யவேண்டா திருமார்பனைச்சிந்தையுள்வைக்குமன்பீர், வாயோதுவேத மலிகின்றதொல்சீர் மறையாளர்நாளு முறையால்வளர்த்த, தீயோங்கவோங்கப் புகழோங்குதில்லைத் திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே.

தீ க்ஷி த சு வா மி க ள் சி ற ப் பு.

## கோயிற்புராணம்.

மாமணித்தேர்கண்மன்றின் வடகுடபானிறுத்தித்
தாமணைந்தருமுனிக்குத் தம்பிரானருளினாலே
தூமலிவகையாற்காட்டத் தொகையிலோர்முனிவரங்குத்
தேமலியலங்கன்மார்பன் கண்டிலன்றிகைத்துநின்றான்.

செம்மைமெய்ப்பெரியோர்போலத் தேடரிதென்றுமைந்தன்
மெய்ம்மையிற்றுயரநோக்கி விமலன்விண்ணவருங்கேட்ப
வெம்மையொப்பவர்கள்யாரும் யூமவர்க்கொப்போமென்றே
யம்மையப்பனுமாவானு மவர்களிலொருவனென்றான்.

என்றருள்செய்தவாய்மை யாவருங்கேட்டுத்தில்லை
மன்றினின்றுடுகின்ற மறையவன்மறையோர்தம்மி
லொன்றெனலாகுமேன்மை யுடையரென்றுளந்துளங்கிச்
சென்றடிபணிந்தான்மைந்தன் றேவர்பூமாரிபெய்தார்.

## பெரியபுராணம்.

போற்றிநீடில்லைவாழந் தணர்திறம்புகலலுற்றே
னீற்றினுனிறைந்தகோல நிருத்தனுக்குரியதொண்டாம்
பேற்றினார்பெருமைக்கெல்லை யாயினார்பேணிவாழு
மாற்றினார்பெருகுமன்பா லடித்தவம்புரிந்துவாழ்வார்.

பொங்கியதிருவினீடும் பொற்புடைப்பணிகளேந்தி
மங்கலத்தொழில்கள்செய்து மறைகளாற்றுதித்துமற்றுந்
தங்களுக்கேற்றபண்பிற் றகும்பணித்தலைநின்றுய்த்தே
யங்கணர்கோயிலுள்ளா வகம்படித்தொண்டுசெய்வார்.

ஞானமேமுதலாநான்கு நவையறத்தெரிந்துமிக்கார்
தானமுந்தவமும்வல்லார் தகுதியின்பகுதிசார்ந்தார்
ஊனமேலொன்றுமில்லா ருலகெலாம்புகழ்ந்துபோற்று
மானமும்பொறையுந்தாங்கி மனையறம்புரிந்துவாழ்வார்.

செம்மையாற்றணிந்தசிந்தைத் தெய்வவேதியர்களானார்
மும்மையாயிரவர்தாங்கள் போற்றிடமுதல்வனாரை
யிம்மையேபெற்றுவாழ்ந்தா ரினிப்பெறும்பேறொன்றில்லார்
தம்மையேதமக்கொப்பான நிலைமையாற்றலைமைசார்ந்தார்.

இன்றிவர்பெருமையெம்மா லியம்பலாமெல்லைத்தாமோ
தென்றமிழ்ப்பயனாயுள்ள திருத்தொண்டத்தொகைமுன்பாட
அன்றுவன்றொண்டர்தம்மை யருளியவாரூரண்ணன்
முன்றிருவாக்காற்கோத்த முதற்பொருளானாரென்றால்.

மற்றையஆசாரங்களினும் வைதிகஆசாரமே
சிறப்புடையதென்பதற்குப் பிரமாணம்.

## சூதசங்கிதை.

சாற்றதீந்திரியமான தருமமாதிகளினுஞ்சீர்
மாற்றரும்பரசிவன்ற னிடத்திலுமறையேநாளு
மேற்றமாராளவையாகு மியல்பினலிதரமார்க்கந்
தேற்றுமாசாரத்தும்வி சேடம்வைதிகவாசாரம்.

அதுவே ஞானத்திற்குங் காரணமெனல்.

வேதவேதாங்கமாதி விரும்பத்தியயனஞ்செய்தல்
போதமற்றவைசெய்வித்தல் பொலிந்தவேதார்த்தபத்தி
மேதகுமறைவிரோத மேவுநூலுபேட்சைசாந்தி
காதலார்தாந்திமற்று ஞானங்கமென்பகற்றோர்.

வைதிகமார்க்கத்தில் அநதிகாரிகளுக்கே ஆகமங் கூறியதெனல்.

இத்தகுவைதிகமார்க்கப் பிரவிர்த்தியில்லாருக்
கத்தனுரணத்தில்வன்னந் தருமமாச்சிரமநல
மொத்தபூசாதியெல்லா முரைத்தபடியேபற்பல
சித்தநிலவாகமத்துஞ் செப்பியிருக்கின்றனனால்.

வரமலரின்மேயவனு மாயவனுமற்றுமுள
சுரருஞ்சில்லாகமமா திகள்சொல்லியிருக்கின்று
ரரவணிவார்க்களாய வந்தணீர்வைதிகத்தோன்
வீரவுமிவையனுசரிக்கக் கூடாதுமெய்மையே.

வைதிகர்கள்வேதவிதியேபூசிக்கவேண்டுமெனல்.

வைதிகர்க்குவேதவிதி மாண்பூசையல்லாது
நைதலிறந்திரவிதியி னற்பூசைகூடாது
மெய்திகழுஞ்சிவாகமத்து மேவுதீக்கையர்சில்லோ
ரைதிலிங்கதாரணஞ்செய் வாரதுவுங்கூடாது.

வேதமார்க்கபூசையுண்டென்பதற்குப்பிரமாணம்.

## திருக்கடைக்காப்பு·

கறைமலிதிரிசிகைபடையடல் கனமழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடை தலைமுகிழ்மலிகணிவடமுக
முறைதருகரனுலகினிலுய ரொளிபெறுவகைநினைவொடுமலர்
மறையவன்மறைவழிவழிபடு மறைவனமமர்தருபரமனே.

அறையார்கழலந்தன்றனை யயின்மூவிலையழகார்
கறையார்நெடுவேலின்மிசை யேற்றானிடங்கருதின்
மறையாயினபலசொல்லியொண் மலர்சார்ந்தவைகொண்டு
முறையான்மிகுமுனிவர்தொழு முதுகுன்றடைவோமே.

நலமலிதருமறைமொழியொடு நதியுறுபுனல்புகையொளிமுதன்
மலரவைகொடுவழிபடுதிறன் மறையவனுயிரதுகொளவரு
சலமலிதருமறலிதனுயிர் கெடவுதைசெய்தவனுறைபதி
திலதமிதெனவுலகுகள்புகழ் தருபொழிலணிதிருமிழலையே.

நன்றுநகுநாண்மலரா னல்லிருக்குமந்திரங்கொண்
டொன்றிவழிபாடுசெய லுற்றவன்றனோங்குயிர்மேற்
கன்றிவருகாலனுயிர் கண்டவனுக்கன்றளித்தான்
கொன்றைமலர்பொன்றிகழுங் கோளிலியெம்பெருமானே.

துறைபலசுனைமூழ்கித் தூமலர்சுமந்தோடி
மறையொலிவாய்மொழியால் வானவர்மகிழ்ந்தேத்தச்
சிறையொலிகிளிபயிலுந் தேனினமொலியோவாப்
பறைபடுவிளங்கருவிப் பருப்பதம்பரவுதுமே.

## தேவாரம்.

அறைகலந்தகுழன்மொந்தைவீணையாழ மந்தரத்திற்கந்திருவரமரரேத்த, மறைகலந்தமந்திரமுநீருங்கொண்டுவழிபட்டார் வானாளக்கொடுத்தியன்றே, கறைகலந்தபொழிற்கச்சிக்கம்பமேய கனவயிரத்திரடூணேகவிசூழ்மாட, மறைகலந்தமழபாடிவயிரத்தூணே யென்றென்றேநானரற்றிநைகின்றேனே.

அவரவர்விதிப்படிபூசித்துக்கொண்டொருவரையொருவர்
தீண்டலாகாதென்பதற்குப் பிரமாணம்.

## சூதசங்கிதை.

ஆகமிகர்வைதிகர்க்கவ் வப்பூசையேதகுதி
ஆகமிகர்வைதிகரைத் தொடுதலும்வைதிகரானோ
ராகமிகரைத்தொடுத லுங்கூடாதவிராச
னாகமிகன்வைதிகன்வே றாயிருக்கச்செயல்வேண்டும்.

## வைதிகர்சிறப்பு.

திங்களணிமாதேவற் கொப்பானதேவனுஞ்சீர்
பொங்குசிவஞானத்திற் கொத்தபொலிஞானமும்வன்
கங்கைநதிக்கொப்பான கரிசிலாமாநதியும்
பங்கமறுமைந்தெழுத்திற் கொப்பாகப் பகர்பனுவும்.

வாரணவாசிக்குநிகர் மாநகருமினிதாய
சீரணவுமன்னத்திற் கொப்பாகச்செறியுணவு
மேரணவுதவத்திரெப் படியிலையோவப்படியே
பேரணவுவைதிகருக் கொப்பாவார்பேசினிலே.

உலகினுக்குவைதிகன்செங் கதிரோனையொத்தொளிர்வா
னலர்புகழ்மற்றவன்சிவன்போல் யாவரும்போற்றத்தக்கான்
மலமிலவன்மான்மியம்யான் சொல்லுதற்குவல்லேனோ
பலமறைகண்மிருதிபுரா ணுதிகளேபகருமால்.

வைதிகர் ஆகமமார்க்கத்தை யனுசரிக்கவேண்டுவ தில்லையெனல்.

வேதவிதியாகமநல் விதியுடையோரனுசரிப்ப
ரேதமிலாகமவிதிவை திகர்தழுவவேண்டுவதின்
றூதர வினிவையனைத்து மறிமினேவென்றுரைத்துச்
சூதமுனிவணங்குபுதன் றூயகுரவனைநினைத்தனன்.

இதுவே யுண்மைப்பொரு ளென்பதற்குப் பிரமாணம்.

## பிரமகீதை.

இதரமாகியவருத்தமெல்லாம்பூ ருவபக்கமென்பார்நல்லோர், சி தர்தராவிதுவேசத் தியமானவேதார்த்தஞ் சிறப்புற்றோங்கி, மதருறு மிவ்விடயத்திற் காய்ந்தமழுவினைநாவில் வைத்துக்கொண்டு, பதமுற ச்சொல்வேன்சிவனைத்தீண்டியுமுத்தரந்துணிந்து பகருவேனே.

இந்தவருத்தத்தினுக்குவேறுண்டே லிப்பொழுதேயென்சிரங்க ள், சந்தமற வெடித்தற்றுச் சிதறுகவிவ் வருத்தஞ்சத் தியமேயாகிற், பந்தமெனக் கொழித்தருளும் பரசிவனிங்கிப்பொழுதே பரிந்துகாட் சி, தந்தருள்கவென்றுரைத்து வணங்கியிருந் தான்கமலத்தவிசின்மே லோன்.

## வைதிகசம்போதினி.

இதற்கு மாறுசொல்வான் தூஷணம்.

### திருவள்ளுவர்.

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

அவனுக்குத்தண்டம்.

### அஞ்ஞவதைப்பரணி.

தொல்லையுள்ள பரிசுசொன்ன சுருதியைக்கொ டாடுமே
யில்லையென்ற பேயின்வாயி லெரியைவையு மென்னுமே.

வாழ்த்து.

### ஸ்ரீகுமாரதேவர் நெஞ்சுவிடுதூது,

சிவன்றிருவுருவாமைந்து சின்மயவெழுத்தும்வாழி
நவந்தருநீறும்வாழி நயனநன்மணியும்வாழி
கவின்றருகுமாரதேவன் கழலிணையிரண்டும்வாழி
யவன்றிருவடியார்தம்மோ டாருயிரனைத்தும்வாழி.

### கோயிற்புராணம்.

செடிசேர் பொழிலணி புலியூர்வளநகர்
செல்வம் பெருகுக திருமன்றிற்
கொடிசேர் விடையின னடிசேரொளிதெளி
குறிகூடுககுழு மறைசூழ்க
பொடிசேர் வடிவின ரடிசேர் முடியினர்
புனல்சே ரிருவிழி யினராகி
யடியே னெனதுய ரகல்கூடிடுநெறி
யாள்வா னடியவர் வாழ்வாரே.

மழைவழங்குக மன்னவனோங்குக
பிழையில்பல்வள னெல்லாம்பிறங்குக
தழைகவஞ்செழுத் தோசைதனையெலாம்
பழையவைதிக சைவம் பரக்கவே.

சம்பூரணம்.

வெற்றிவேலுற்றதுணை.

---